15th December 1961]

**THE HON. SRI P. KAKKAN** : எந்த ஸ்டாக்கிஸ்ட்ஸ் திருட்டுத் தனமாக சிமென்டை விற்றாலும் அவர்கள் மேல் தக்க நடவடிக்கைகள் எடுக்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறோம். அங்கத்தினர் அவர்கள் அப்படி ஏதாவது தெரிவித்தால், அவற்றை விசாரிக்க அரசாங்கம் முன்வரும்.

**SRI S. M. ANNAMALAI** : நம் மாநிலத்தில் உற்பத்தியாகும் சிமென்ட் அதிகமாக இருந்தும், தேவை குறைவாகயிருந்தும் கூட ஏன் நம் மாநிலத்தில் சிமெண்ட் கிடைப்பது அரிதாயிருக்கிறது? அதற்கு காரணமென்ன? ஏன் வெளி மாநிலங்களுக்கு, சிலோன் போன்றயிடங்களுக்கும் ஏற்றுமதி செய்யவேண்டும்? நம் மாநிலத்தின் தேவை போக மீதியை ஏற்றுமதி செய்யக் கூடாதா?

**THE HON. SRI P. KAKKAN** : பாரத நாட்டில் எந்த மாகாணத்தில் சிமென்ட் பாக்டரி ஆரம்பித்தாலும் பாரத நாட்டு மக்கள் அத்தனை பேர்களுக்கும் அது சொந்தம். இங்கு தேவையான அளவில் எவ்வளவு வேண்டுமோ அதை வாங்கிக் கொண்டிருக்கிறோம். அரசாங்கம் அடிக்கடி நமக்குத் தேவைக்கு அதிகமாகவே பெற்றுக் கொண்டிருக்கிறோம்.

*T.B. Sanatorium, Tambaram*

* 2368 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Revenue be placed to state whether there is any proposal to allow a weekly holiday for the workers in the Government T.B. Sanatorium, Tambaram?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, Sir.

**SRI K. SATTANATHA KARAYALAR** : இது எப்பொழுது அமுலுக்கு கொண்டுவரப்படும்?

**THE HON. SRI M. A. MANICKAVELU** : ப்ரொப்போஸல் இருக்கிறது. பட்ஜெட் ப்ரொப்போஸலில் இதைப் பற்றி கவனிக்கப்படும்.

*Kulasekarapattinam Port*

* 2369 Q.—SRI M. S. SELVARAJAN : Will the Hon. the Minister for Works be pleased to state the steps taken to improve Kulasekharapattinam and Kayalpattinam ports in Tiruchendur taluk?

THE HON. SRI P. KAKKAN : Certain improvements have been effected at Kulasekarapattinam port. A leading mark beacon to show the position of the entrance channel has been constructed during 1959. Two tripod beacons, one on the Vattakkal rock and the other on the southern end of the northern side rocks, have been fixed at the port for the guidance of sailing vessels. Laying of a mooring buoy at the sailing vessels anchorage at the port is also under consideration by the Port Department. Further essential developments at the port can be considered when the trade and financial position of the Kulasekarapattinam Landing and Shipping Fund improve. Kayalpattinam port in Tiruchendur taluk is no longer in existence.

SRI M. S. SELVARAJAN: சிறிய துறைமுகமாக அபிவிருத்தி செய்யப்படுவதற்கு அடிப்படையாக என்னென்ன அம்சங்கள் பூர்த்தி செய்யப்படவேண்டும். குலசேகரப்பட்டணம், காயல் பட்டணம் பூர்வாங்க வேலை செய்ய ஏற்பாடு செய்யப்படுமா?

THE HON. SRI P. KAKKAN: Kayalpattinam port in Trichendur taluk is no longer in existence.
ஆகவே, முதலில் குலசேகரப்பட்டணம்தான், அதைத்தான் இம்ப்ரூவ் செய்ய ஏற்பாடு செய்துக் கொண்டிருக்கிறோம். பின்னால் உள்ள நிலைமைக்குத் தக்கபடி செய்யப்படும்.

*Government Hospital, Tiruvannamalai*

*2370 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of Sri P. U. SHANMUGAM): கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

திருவண்ணாமலை சர்க்கார் மருத்துவ மனையில் அதிகப்படியான கட்டிடம் கட்டும் உத்தேசமுண்டா?

THE HON. SRI M. A. MANICKAVELU: Yes, Sir.

SRI S. M. ANNAMALAI: எவ்வளவு தொகையில் என்னென்ன கட்டிடங்கள் கட்டப்படும்?

SRI M. A. MANICKAVELU: டி.பி. க்ளினிக் 1,36,000 ரூபாய் எஸ்டிமேட்டில் கட்டவும், கண், மூக்கு, தொண்டை அதற்காக 1.25 லட்சத்தில் கட்டிடம், பல் சிகிச்சைக்காக 90,000-ல் இவையெல்லாம் கட்ட ஏற்பாடு இருக்கிறது. அதற்கு அட்வகேட் திரு. வீரராகவன் என்பவர் ஒருவர் 10,000 ரூபாய் நன்கொடை கொடுத்திருக்கிறார். அதையும் பயன்படுத்தி இந்த வசதிகளை ஏற்படுத்த நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப் படுகின்றன.
கட்ட முடியுமா?

SRI K. VINAYAKAM: அரசியல் காரணமாக மூளை கோளாறாகப் போகிறதே, அப்பேர்ப்பட்ட மூளைகளை திருத்தியமைக்க ஏதாவது சிகிச்சை சாலையை திருவண்ணாமலை ஆஸ்பத்திரியில் கட்ட முடியுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: எட்டு லட்சம் ரூபாய் செலவில் ஏலகிரி மலைக்கு ரோடு போட்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட குளிர்ச்சியான இடங்களுக்குப் போனால் மூளைக்கு சாந்தி கிடைக்கும்.

*Central Road Fund*

*2371 Q.—SRI R. SRINIVASA IYER (on behalf of SRI T. K. SUBBIAH): கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தமிழ் நாட்டுக்கு முதல் ஐந்தாண்டு, இரண்டாவது ஐந்தாண்டு திட்டங்களுக்கு சென்ட்ரல் ரோடு பண்டிலிருந்து முறையே கிடைத்த தொகை எவ்வளவு?